

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்



"அவனின்றி ஓரணுவும் அசையாது". "விதிப்படி தான் அனைத்தும் நடக்கும்". "எல்லாம் அவன் செயல்". "விதிக்கப்பட்ட படிதான் நடக்கும்". "நடப்பவைகளுக்கெல்லாம் நன்றி கூறுவோம்"

-இவையெல்லாம் என்ன?

எவையும் தாறுமாறாக நடக்காது; எல்லாவற்றுக்கும் பின்புலமாக ஏதோ ஒரு தெய்வீகமான ஒழுங்கு உள்ளது என்ற கருத்தையே இந்த வாக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. இவற்றை அங்கீகரிக்கும் போது தேவையற்ற எதிர்மறைச் சிந்தனைகள் யாவும் நம்மை விட்டு விலகி விடுகின்றன.

அகத்தைப் பொறுத்தவரையில் எதிர்மறைச் சிந்தனைதான் அனைத்துப் பாதகமான அம்சங்களுக்கும் காரணம்.

நாமாகச் சிந்திக்குந்தோறும் நேர்மறையாக சிந்திப்போமாயின் நல்ல விதமான மன இயக்கமும் அனுபவங்களுமே ஏற்படுகின்றன.

இத்தகைய அணுகுமுறைகளையும் தியானம் என்ற நூலில் நாம் வலியுறுத்தியுள்ள தியான முறைகளையும் தற்காலிகமான ஒரு சிகிச்சை முறையாகப் பயன்படுத்திக் கொள்வதில் தவறேதும் கிடையாது.

- ஸ்ரீ பகவத்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்ப வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Checque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/o. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# கவலைகளைக் கடந்து செல்வோம்





- ஸ்ரீ பகவத்

எனது 18-வது வயதில் நான் ஆன்மிக உலகத்தினுள் அடி எடுத்து வைத்திருந்தேன்.

எனது ஆன்மிகத் தேடல்கள் நிறைவடையும் போது எனக்கு 58 வயதாகிவிட்டிருந்தது.

இந்த 40 வருட காலத்துக்குள் நான் பலவிதமான அணுகுமுறைகளையும் பயிற்சி முறைகளையும் சந்தித்து விட்டேன்.

எனது பயிற்சி முயற்சிகள் பலருக்கும் பயன்படும் என்று கருதி அவற்றையெல்லாம் தொகுத்து "அனுஷ்டான ஆன்மிகம்" என்ற பெயரில் நூல் ஒன்றை எனது தெளிவுக்கு முன்பே வெளியிட்டிருந்தேன்.

தெளிவுக்குப் பிறகு அனுஷ்டானங்கள் எவற்றையும் நான் செய்வதும் இல்லை; மற்றவர்களுக்குப் பரிந்துரைப்பதும் இல்லை. அதனால் அந்த நூலை மீண்டும் பிரசுரிக்க நான் விரும்பவில்லை.

ஆனால் என்னுடைய ஆதரவு இல்லாமலேயே அந்த நூலுக்கு நமது அன்பர்களிடையே வரவேற்பு ஏற்பட்டுவிட்டது. ஆகவே வேறு வழியில்லாமல் அனுஷ்டான ஆன்மிகம் என்ற அந்த நூலை நமது மற்றைய நூல்களோடு சேர்த்து மீண்டும் பிரசுரிக்க ஆரம்பித்துவிட்டோம்.

அப்படி பிரசுரிக்கும் போது அதனையே இரண்டு நூல்களாகப் பிரித்து முதற்பகுதியை "தியானம்" என்ற பெயரிலும், இரண்டாவது பகுதியை "நீயே மெய்ப்பொருள்" என்ற பெயரிலும் வெளியிட்டோம்.

தனிப்பட்ட முறையில் அவற்றை நான் பரிந்துரைக்காவிட்டாலும் பலர் அந்நூல்கள் மீது ஆர்வம் காட்டி வருகின்றனர்.

சமீபத்தில், திருச்சியிலிருக்கும் குழந்தைகள் நல மருத்துவர் ஒருவர் "கவலைகள் அனைத்துக்கும் தீர்வு" என்னும் நமது நூலைத் தமது பேச்சு மொழியில் அனைவரும் இரசித்துக் கேட்கும் வகையில் ஒலி நூலாக வெளியிட்டிருந்தார்.

அடுத்து நூல்களையும் அவ்வாறு முயன்றிடுமாறு அவரிடம் கேட்டேன்.

அதற்கு அவர் ஏற்கனவே இன்னுமொரு நூலை ஒலி நூலாக்க ஆரம்பித்து விட்டதாக கூறினார். என்ன நூல் என்று கேட்டதற்கு "நீயே மெய்ப்பொருள்" என்ற நமது நூல்தான் அது என்றும், அதுதான் அவருக்கு மிகவும் பிடித்திருப்பதாகவும் கூறிவிட்டார். நானும் மனப்பூர்வமாக அவருடைய முயற்சிக்கு ஆதரவு தெரிவித்து விட்டேன்.

சில தினங்களுக்கு முன் சென்னையில் இருந்து அன்பர் ஒருவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டார்.

"எனக்குத் தெரிந்த ஒருவருக்கு கொரானா தொற்று நோய் ஏற்பட்டுவிட்டது. அந்த நோய் எனக்கும் ஏற்பட்டு விடுமோ என்ற பயம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. அந்த பய உணர்வு தாமாகவே என்னை விட்டுப் போய்விடும் என்று பார்த்தேன். ஆனால் ஏதோ ஒரு வகையில் நானே அதனை எனக்குள் புதுப்பித்து விடுவதால் அந்தப் பய உணர்வு எனக்குள் நீடித்து இருந்து கொண்டே இருக்கிறது. இதிலிருந்து எவ்வாறு விடுபடுவது?"

– இப்படி ஒரு கேள்வியை முன்வைத்தார்.

"அகத்தைப் பொறுத்தவரையில் அங்கு ஏற்படும் சாதக மற்றும் பாதகமான உணர்வுகளை நாம் சீரமைக்கத் தேவையில்லை. அவை யாவும் நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்கு ஏற்ப, தாமாக ஏற்பட்டுத் தாமாகவே மறைந்துவிடும். அவற்றை நாம் நாமாக முயன்று சீரமைக்கத் தேவையில்லை. அவற்றின் இயற்கையே, தாமாகத் தோன்றித் தாமாக மறைவது தான்...

"வெளிப்பட்ட அலை, தாமாக மறைவது போல், வெளிப்பட்ட சப்தங்கள் தாமாகவே மறைந்து விடுவதைப் போல் நமக்கு ஏற்படும் அக உணர்வுகள் யாவும் தாமாகவே மறைந்து விடுகின்றன. அதுதான்

அவற்றினுடைய இயற்கையான தன்மை...

"நமது கவனம் யாவும் நாம் செய்ய வேண்டிய செயல்களில்தாம் இருக்க வேண்டுமே தவிர, நமக்கு ஏற்படும் அக உணர்ச்சிகளைச் சீரமைக்கும் வேலையில் இருக்க கூடாது. நாம் நமது அக உணர்ச்சிகளில் அக்கறை காட்டாமல் விட்டுவிடும் போது, அவை யாவும் மீண்டும் புதுப்பிக்கப்படாமல் தாமாகவே மறைந்து விடுகின்றன."

– இத்தகைய நமது கருத்தை அவர் ஏற்கனவே அறிந்து வைத்திருந்தார்.

அதில் அவர் பலனடைந்தவரும் கூட.

ஆயினும் அவரது பிரச்சினை தீர்ந்திடவில்லை.

அதனால் தற்காலிகமான ஒரு சிகிச்சை முறையாக, நிர்விகற்ப தியானம் என்னும் நமது தியான முறையைப் பயிற்சி செய்யுமாறு அவருக்கு ஆலோசனை வழங்கினேன்.

மொத்தத்தில் அக நிகழ்வுகளை நாம் எவ்வாறு அணுக வேண்டும்,

புற நிகழ்வுகளை எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும் என்ற அடிப்படை உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அக நிகழ்வுகள் அனைத்தையும் அணுக வேண்டுமே தவிர எதிர்கொள்ளக் கூடாது.

புற நிகழ்வை அணுகவும் செய்யலாம் எதிர்கொள்ளவும் செய்யலாம்.

அகத்தைப் பொறுத்த வரையிலும் தோல்விதான் இலக்காக இருக்க வேண்டும்.

புறத்தைப் பொறுத்தவரைதான் வெற்றியை இலக்காக வைத்துக் கொள்ள வேண்டும்.

புறத்தைப் பொறுத்தவரை சராசரி உலகத்தவருக்கும், நமது பாதையில் பயணிப்பவருக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது.

வெற்றிக்கும் உயர்வுக்கும் பாடுபடுவது தான் உலகத்தவரின் அணுகுமுறை. அதில் எந்தத் தவறும் கிடையாது. நமது அணுகுமுறையும் செயல்முறைகளும் தர்ம நியாயங்களை அனுசரித்து அமைந்திருந்தால் மட்டும் போதும்.

அகத்தைப் பொறுத்தவரையும் நமது அணுகுமுறை என்ன என்பதை நாம் மீண்டும் ஒருமுறை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தில் உள்ளோம்.

நாம் ஏற்கனவே பார்த்த ஓர் அம்சத்தைதான் மீண்டும் ஒருமுறை பார்க்கப்போகிறோம்.

இரண்டு விதமான நிலைகள் உள்ளன.

நாம் நல்ல சூழ்நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நல்ல தொழில் நல்ல வகையில் வருவாய் ஈட்டிக்கொண்டிருக்கிறோம். நம்மோடு தொடர்புடைய அனைவரும் நமக்கு உதவி புரிபவர்களாகவே இருக்கிறார்கள். ஆனாலும் கூட நம்முடைய மனம் மட்டும் நிம்மதி இல்லாமல் சஞ்சலப் பட்டுக் கொண்டிருக்கிறது. இப்படி ஆகிவிடுமோ, அப்படி ஆகி விடுமோ என்றதொரு பதற்றத்தை ஏற்படுத்தி கொண்டே இருக்கிறது.

–இது முதலாவது நிலை.

புற நிகழ்வுகளைப் பொறுத்தவரையில் நிச்சயமற்ற தன்மையும் பிரச்சனைகளும் மாறிமாறி ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. ஆனால் அத்தனைப் பிரச்சனைகளுக்குமிடையே அவை அனைத்தையும் எளிதாக ஏற்றுக் கொண்டு நமது மனம் மட்டும் அமைதியாகவே இருக்கிறது.

– இது இரண்டாவது நிலை.

இப்படி இரண்டு விதமான நிலைகள் உள்ளதாக வைத்துக் கொள்வோம்.

இந்த இரண்டு நிலைகளில் ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்யும்படி நம்மைக் கேட்டுக் கொண்டால் நாம் எதனை தேர்வு செய்வோம்?

நாம் எவருமே முதலாவது நிலையைத் தேர்வு செய்ய மாட்டோம். அனைவரும் இரண்டாவது நிலையையே தேர்வு செய்திடுவோம்.

இதிலிருந்து நமக்கு என்ன தெரிகிறதென்றால்,

புறப் பிரச்சினைகளை எப்படி இருந்தாலும் அது பிரச்சினையே அல்ல; அகப் பிரச்சினை தான் உண்மையான பிரச்சினை என்பது தெரிகிறது.

அதற்காக அகப் பிரச்சினையே இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்ற அர்த்தமும் கிடையாது.

எல்லாவற்றிலும் ஓர் ஆரோக்கியமான அணுகுமுறையைப் பின்பற்ற வேண்டும்.

அனைத்து பிரச்சினைகளின் போதும் மதுவை அருந்தி உன் மனதை மட்டும் எப்போதும் மகிழ்ச்சியாக வைத்துக்கொள் என்று நாம் ஒருவருக்கு ஆலோசனை வழங்கினால் அது சரியாக இருக்குமா?

அதுபோல எப்போதும் தியானத்திலேயே மூழ்கிக் கிடந்து உன் மனதை எப்போதும் அமைதியாக வைத்துக்கொள் என்று ஒருவருக்கு ஆலோசனை வழங்கினாலும் அது சரியாக இருக்காது.

செய்ய வேண்டிய செயல்களை ஊக்கமுடன் செய்வதற்கும் நாம் அனைவரையும் ஊக்குவிக்க வேண்டும்.

நமது அகத்தில் ஏற்படும் அக உணர்ச்சிகள் யாவும் நமக்கு மட்டுமே சொந்தமானவையாகும். ஆனால் நமது புறச் செயல்கள் யாவும் பலரோடு தொடர்புடையவையாகும்.

நாம் நமது மனதைக் கொண்டு தான் நமது புறச் செயல்களில் ஈடுபடுகிறோம். நமது புறச் செயல்களும் நம்முடைய மனதில் எதிர் விளைவுகள் என்னும் தாக்கத்தையும் ஏற்படுத்தவே செய்கின்றன.

அகம்-புறம் என நாம் பிரித்துப் பார்த்தாலுங்கூட அகமும் புறமும் ஒன்றோடொன்று கலந்து தான் அமைந்துள்ளன. அகத்தின் தாக்கம் புறத்திலும், புறத்தின் தாக்கம் அகத்திலும் காணப்படுகின்றன.

இதனால்தான் – இதற்கு உதவியாகத்தான் நமது ஆன்மிக முன்னோடிகள் அனைவரும் நல்ல நம்பிக்கைகளை விதைத்து விட்டுச் சென்றுள்ளனர்.

"அவனின்றி ஓரணுவும் அசையாது". "விதிப்படி தான் அனைத்தும் நடக்கும்". "எல்லாம் அவன் செயல்". "விதிக்கப்பட்ட படிதான் நடக்கும்". "நடப்பவைகளுக்கெல்லாம் நன்றி கூறுவோம்"

-இவையெல்லாம் என்ன?

எவையும் தாறுமாறாக நடக்காது; எல்லாவற்றுக்கும் பின்புலமாக ஏதோ ஒரு தெய்வீகமான ஒழுங்கு உள்ளது என்ற கருத்தையே இந்த வாக்கியங்கள் பிரதிபலிக்கின்றன.

ஆன்மிகப் பெரியவர்களுடைய வார்த்தைகள் பொய்யாக இருக்காது என அந்த வாக்கியங்கள் சுட்டிக்காட்டும் உண்மையை நாம் மனப்பூர்வமாக அங்கீகரிக்கும் போது,

அவை அனைத்தும் நேர்மறைச் சிந்தனையாக – Positive Thinking ஆக இருந்து நமக்குள் செயல்பட ஆரம்பித்து விடுகின்றன.

இதனால் தேவையற்ற எதிர்மறைச் சிந்தனைகள் யாவும் நம்மை விட்டு விலகி விடுகின்றன.

அகத்தைப் பொறுத்தவரையில் எதிர்மறைச் சிந்தனைதான் அனைத்துப் பாதகமான அம்சங்களுக்கும் காரணம்.

நாமாகச் சிந்திக்குந்தோறும் நேர்மறையாக சிந்திப்போமாயின் நல்ல விதமான மன இயக்கமும் அனுபவங்களுமே ஏற்படுகின்றன.

இத்தகைய அணுகுமுறைகளையும் தியானம் என்ற நூலில் நாம் வலியுறுத்தியுள்ள தியான முறைகளையும் தற்காலிகமான ஒரு சிகிச்சை முறையாகப் பயன்படுத்திக் கொள்வதில் தவறேதும் கிடையாது.

லிப்ட் (Lift) இருந்தாலும்கூட ஓர் அவசரத்துக்கு நாம் படிக்கட்டுகளையும் பயன்படுத்திக் கொள்ளலாம்.





**V.A.P. சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## புரிதலைத் திரும்பத் திரும்ப நினைவுபடுத்திக் கொண்டிருக்க வேண்டுமா?

**கேள்வி :** நான் ஸ்ரீபகவத் ஐயாவின் நூல்களைக் கடந்த 8 மாதங்களாகப் படித்து வருகிறேன். அவரது YouTube வீடியோக்களையும் பார்த்து வருகிறேன். என்னுடைய பழைய மனநிலையை விட நான் இப்போது நன்றாக இருப்பது போல் தோன்றுகிறது. இந்த ஞானப் புரிதல் சம்பந்தமாக புத்தகம் படிக்கும் போதும் லுடிரகூரநெல் வீடியோவைப் பார்க்கும் போதும் புரிதல் நன்றாகவே இருக்கிறது. பிறகு நாட்கள் செல்லச் செல்ல படிப்படியாக புரிதல் குறைந்து ஒரு கட்டத்தில் எனது பிரச்சினைகளே வெற்றி பெறுகின்றன. இந்தப் புரிதலைத் திரும்பத் திரும்ப நினைவுபடுத்திக் கொண்டே இருக்க வேண்டுமா? புரிதலை தக்க வைத்துக் கொள்ள ஏதேனும் வழிமுறை உண்டா? புரிதலைத் தெளிவாக உள்வாங்கிக் கொள்வதற்கு வேறு ஏதேனும் வழிமுறை உள்ளதா?

**பதில் :** இயற்கையின் இயக்கமான மனதின் இயக்கத்தில் எந்த ஒரு குறைபாடும் இல்லை. அந்த மன இயக்கத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்வதையே ஞானம் - புரிதல் என்று கூறுகிறோம்.

இயற்கையான மன இயக்கத்தில் நாமாக எந்தக் குறுக்கீடும் செய்யாத போது, தோன்றிய அனைத்து எண்ண உணர்வுகளும் எந்தத் தங்கு தடையும் இன்றி தாமாகவே மறைந்து விடுகின்றன.

மனம் வெளிப்படுத்திய எண்ண உணர்வுகளை நமது முயற்சியின் மூலம் "வேண்டும்" என்று பற்றி பிடிப்பது, அல்லது "அந்த உணர்வு வெளிப்படவே கூடாது" என எதிர்ப்பது என்று ஏதோ ஒரு வகையில் மன இயக்கத்தில் நாம் குறுக்கிடுவதால் மட்டுமே போராட்டமும் பிரச்சினையும் ஏற்படுகின்றன.

இந்தப் புரிதலைத் திரும்பத் திரும்ப நாம் நினைவுபடுத்த வேண்டிய எந்த அவசியமும் இல்லை. இந்தப் புரிதலைத் தக்க வைத்துக் கொள்வதற்கும் எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை.

ஒரு சூழ்நிலையில், மனம் நமக்குப் பிடிக்காத ஓர் உணர்வை வெளிப்படுத்துகிறது என்று வைத்துக்கொள்வோம். நாம் நம்மை அறியாமலேயே அந்த உணர்வைப் புறக்கணிக்கவோ, அல்லது எதிர்க்கவோ தொடங்குகிறோம். ஏதோ ஒரு வகையில் அந்த உணர்வின் மீது சவாரி செய்து நாம் நமக்குத் தெரியாமலே சிந்திக்கத் தொடங்கி விடுகிறோம் . இதனால் மன அழுத்தம் கூடி மனப் பாரம் ஏற்பட்டுவிடுகிறது. இந்த மனப் பாரத்தை நம்மால் உணராமல் இருக்கவே முடியாது.

நமக்கு ஏற்பட்ட மனப் பாரமே நமக்குப் புரிதலை மீண்டும் நினைவுபடுத்தி விடும். எந்தக் கணத்தில் மன இயக்கத்தில் நாமாக எதுவும் செய்யத் தேவையில்லை என்பதைப் புரிந்து கொள்கிறோமோ அப்போதே நமது வேலை முடிந்து விடுகிறது. பிரவாகமாக மன இயக்கம் செயல்படத் தொடங்குகிறது.

இந்தப் புரிதலை நினைவு படுத்திக் கொள்வதற்கும் செயல்படுத்துவதற்கும் என நாம் எதுவும் செய்யத் தேவையில்லை.

மன இயக்கம் என்பது தன்னைத்தானே சரிப்படுத்திக் கொள்ளக் கூடிய ஓர் இயற்கையான இயக்கம் என்பதை மட்டும் நாம் அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொண்டால் போதும். இப்படிச் செயல்படும் மன இயக்கத்தில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதை மட்டும் நாம் உறுதிப்படுத்திக் கொண்டால் போதும். ஒருமுறை புரிந்துகொண்டால் போதும் திரும்பத் திரும்ப நினைவுபடுத்த வேண்டிய அவசியம் எதுவும் இல்லை.

உதாரணமாக தஞ்சாவூர் தலையாட்டி பொம்மையை நாம் பார்த்திருப்போம்.

அந்தப் பொம்மையின் அடிப்பகுதியானது ஒரு பந்தை சரி பாதியாக அறுத்து வைத்தாற்போல் தோற்றம் இருக்கும். அந்த அடிப்பகுதியில்தான் பொம்மையின் சமநிலை மையப்பகுதி (equilibrium) அமைக்கப்பட்டிருக்கும். அதன் மேல்பகுதியில் எடை குறைந்த நிலையில் பொம்மையின் உருவம் உருவாக்கப்பட்டிருக்கும்.

தலையாட்டி பொம்மையை எப்படி வேண்டுமானாலும் எவ்வாறு வேண்டுமானாலும் சுழல விட்டாலும் சரித்துப் போட்டாலும் கூட அது சுழன்று தானாகவே சமநிலைக்கு வந்துவிடும். அந்தச் சமநிலை இயற்கையாகவே ஏற்பட்டுவிடும். சமநிலைக்கு வருவதற்கு நாம் எதுவும் செய்யத் தேவை இல்லை. சமநிலை வருவதற்கு நாம் ஏதாவது செய்வதுதான் தலையாட்டி பொம்மையின் சமநிலைக்கு எதிராகச் செயல்பட்டு விடுகிறது. சம நிலையைக் குலைக்கவும் செய்துவிடுகிறது.



தலையாட்டி பொம்மையின் அடிப்பகுதியில் பொம்மையின் சமநிலைக்கான மையம் அமைக்கப்பட்டு இருக்கிறது . அதனால் பொம்மையை எப்படிச் சுழல விட்டாலும் வெகு விரைவாக சமநிலையைத் தாமாகவே அடைந்து விடுகிறது.

இது போல்தான் நமது மனதின் இயக்கமும் தன்னைத்தானே சமநிலைப் படுத்திக் கொள்ளும் ஓர் இயற்கையான தலையாட்டி பொம்மை என்பதை நாம் உறுதியாகப் புரிந்துகொண்டால் மட்டும் போதும்.

மனம் தாமாகவே சம நிலையை அடைந்துவிடும், நம்முடைய எந்த முயற்சியும் இன்றி.

மனதைச் சமநிலைப் படுத்துவதற்கும் தலையாட்டி பொம்மையைச் சமநிலைப் படுத்துவதற்கும் நாம் செய்யும் அத்தனை முயற்சிகளும் வீண் வேலை என்பதை மட்டும் நாம் விளங்கிக் கொண்டால் போதும். சமநிலை என்பது இயற்கையாக நிகழ்வது.

## நன்கொடைகள்

அனைவருக்கும் வணக்கம்.

நாம் எந்த ஒரு செயலையும் பணத்தை முன்னிறுத்தி செய்வதில்லை. நமது நோக்கம் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத்தை உலக மக்கள் அனைவருக்கும் கொண்டு சென்று அனைவரும் துன்பங்களையும் துயரங்களையும் கடந்து விடுதலையோடு வாழவேண்டும் என்பது மட்டுமே.

அதற்கான பணியையே ஸ்ரீ பகவத் மிஷன் மூலமாகவும் பகவத் பாதை மாத இதழ் வழியாகவும் செய்து கொண்டு வருகிறோம்.

இருப்பினும் ஐயாவின் புதிய நூல்களை அச்சிடுவதற்கும் ஸ்ரீபகவத் மிஷனை நிர்வகிப்பதற்கும் பல வழிகளிலும் செலவுகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவைகளை புரவலர்கள், நிறுவனர்கள் இவர்கள் வழங்கும் நன்கொடைகளை கொண்டு செலவுகளை எதிர்கொண்டு வருகிறோம். எனவே வாய்ப்புள்ள அன்பர்கள் புறவலர்களாகவோ நிறுவனர்களாகவோ இணைந்து உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

புரவலர் நன்கொடை - மாதம் ஒன்றுக்கு 1000/-

நிறுவனர் நன்கொடை ரூபாய் 25000/-

ஏற்கனவே புரவலர்களாகவும் நிறுவனர்களாகவும் இணைந்து நம்மோடு தொண்டாற்றும் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

அன்புடன்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம். செல் : 9994205880, 9789165555

## ஸ்ரீ பகவத் ஐயாவின் "தியானம்" என்ற நூலைப் படித்து தியானம் கற்ற ஓர் அன்பரின் கூற்று

" உங்களுடைய தியானத்தைத் தெரிந்து கொண்ட பிறகு தான் தியானம் என்றால் என்ன என்பதே எனக்குத் தெரிந்தது. இதற்கு முன்பெல்லாம் தியானம் என்ற பெயரில் எனக்கு நானே சண்டை தான் போட்டு வந்திருக்கின்றேன் என்பதும் இப்போது தான் தெரிகிறது. பல அமைப்புகளில் பல லட்சங்களைக் கட்டணமாக வாங்கிக்கொண்டு கற்றுக்கொடுக்கப்படும் தியானப் பயிற்சிகளை விட உங்களது தியானப் பயிற்சிகள் தான் உயர்ந்தவையாகவும் பயனுடையவையாகவும் உள்ளன. "

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சக – பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதை மாத இதழ் ஊரடங்கு காலங்களில் அச்சிட முடியாத காரணத்தால் ஏப்ரல் மாதம் PDF File ஆக வெளியிட்டிருந்தோம் மற்றும் மே மாதம் வெளியிடவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இந்த ஊரடங்குக் காலங்களில் தினமும் Online மூலம் ஆங்கிலத்திலும் தமிழிலும் ஞான சத்சங்கங்களை நடத்தி வருகிறோம். இது பலருக்கும் பயனுள்ள வகையில் இருக்கிறது.

இதுவரை ஆன்ம ஞானம் இரகசியமாக இருந்ததை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சராசரி மனிதர்கள் அனைவரும் புரிந்துகொள்ளும் வண்ணம் எளியப் புரிதலாக வழங்குவதால், இதுவரை இரகசியமாக இருந்தது அனைவரும் பயனடையும் வண்ணம் வெட்ட வெளிச்சமாகி விட்டது.

இப்படி ஞானத்தைப் புரிதலாக வழங்குவதால் பிரம்மாண்டமான விடுதலை கூட ஒரு சராசரி மனிதனாலும் அடைந்து விடக் கூடிய வகையில் சர்வ சாதாரணமாக உள்ளது.

இதுவரை மனதை அடக்குவதற்காக போராடிய அறிவு, இதனால் அகச் சரணாகதியை அடைந்து விடுகிறது.

ஆன்மீகத்தின் தேடலை முடித்து வைக்கும் இப் புரிதல், புரிந்து கொண்டவர்களின் மன ரீதியான அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வாக அமைந்து விடுதலையை வழங்கி விடுகிறது.

இந்தப் புரிதல் ஒவ்வொரு மனிதருக்கும் தேவை.

ஞான முகாம் நடத்த முடியாத இந்த ஊரடங்கு காலங்களிலும் ஞானப் புரிதலை அனைவருக்கும் கொண்டு செல்லும் நமது அற்புதப் பணியாக இந்த ஆன்லைன் சத்சங்கங்கள் அமைந்துவிட்டன.

இதனை இனி தொடர்ந்து நடத்தவும் எண்ணியுள்ளோம்.

மேலும் இந்த ஊரடங்கு காலங்களில் உணவுக்கு வழியின்றி தவித்த நமது பகவத் பவன் ஆசிரமத்துக்கு அருகில் உள்ள பழங்குடி கிராம மக்களுக்கு அரிசியையும் உணவுப்பொருட் களையும் நம் அனைவரின் சார்பாக இலவசமாக வழங்கியதோடு PM Care Fund க்கும் ஒரு தொகையை ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக நன்கொடையாக வழங்கியுள்ளோம். இந்த அத்தியாவசிய புறப் பணிகளை செய்வதற்கு உதவிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இனி நமது ஞான முகாம்களை ஆகஸ்ட் மாதத்தில் இருந்து தொடங்கலாம் எனவும் எண்ணியுள்ளோம்.

மேலும் நமது ஸ்ரீ பகவத் காட்டேஜ் கட்டிடப் பணிகள் இரண்டு மாதத்திற்கு பிறகு மீண்டும் ஆரம்பிக்கப்பட்டு விரைவாக நடைபெற்று வருகிறது. இதன் விபரமும் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. இதில் பங்கு கொள்ள ஆர்வம் உள்ள நல்ல உள்ளங்கள் நம்மோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

# சென்னை ஸ்ரீபகவத் பவன்


– ஸ்ரீ பகவத்

அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

சென்னையில் ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்காக நாம் ஏற்கெனவே முயற்சி எடுத்திருந்தோம். அது சில தவிர்க்க முடியாத காரணங்களால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி மீண்டும் அதற்கான ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

சென்னையில் அமைய இருக்கின்ற ஸ்ரீபகவத் பவன் நமது அய்யாவின் இல்லமாகவும் நாம் அனைவரும் ஐயாவை சந்தித்து தங்கி உரையாடிச் செல்ல ஏற்றவகையில் நமக்கான பகவத் பவன் இல்லமாகவும் அமையவிருக்கிறது.

இதனை நாம் கட்டுவதற்குப் பதிலாக புதியதாக கட்டி முடிக்கப்பட்ட இல்லமாக வாங்க முடிவெடுத்து இருக்கிறோம்.

இதனை வாங்குவதற்கு நமக்குத் தேவைப்படும் தொகையை நிறுவனர் (Founder) நன்கொடையின் மூலம் பெறலாம் என முடிவெடுத்துள்ளோம்.

முன்பே சென்னை ஸ்ரீபகவத் பவன் கட்டிடத்திற்கான நிதி வழங்கியவர்களின் நிதியும் இந்த வகைக்கு பயன்படுத்தப்படும்.

ஏற்கெனவே நிதி வழங்கிய இவர்களுக்கு நாம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது சென்னை ஸ்ரீபகவத் பவன் இல்லத்தில் பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

பங்களிப்புத் தொகை எவ்வளவு என்பது முக்கியமல்ல.

பங்களிக்கும் உள்ளமே முக்கியம்.

எனவே தங்களால் இயன்றதை வழங்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உள்ளன்போடு தாங்கள் அளிக்கும் பங்களிப்பை மனமுவந்து பெற்றுக் கொள்கிறோம்.

வாருங்கள் ஒன்றிணைவோம். நம் அனைவரின் ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியால் நமக்கான இல்லத்தை உருவாக்குவோம்.

## ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்

சென்னையிலிருந்து சேலம் செல்லும் பைபாஸ் சாலையில், மின்னாம்பள்ளி அருகில், மகேந்திரா இன்ஜினியரிங் காலேஜ்க்கு எதிரில், சின்ன கவுண்டா புரம் பிரிவு ரோட்டில் நமது **ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்** அமைந்துள்ளது.

இங்கு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அனைத்து தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் ஆடியோ வீடியோ குறுந்தகடுகள் (CD) கிடைக்கும். நமது அன்பர்கள் இதனைப் பயன்படுத்திக்கொள்வதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்து அவர்களும் வாங்கி பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**ஸ்ரீபகவத் மிஷன்,** சேலம்.

# நிகழ்ச்சி நிழல்கள்




ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக இலவசமாக வழங்க அரிசி வாங்கியபோது...




ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் சரவணன் & ஜீவமணி




ஸ்ரீ பகவத் காட்டேஜ் முதல் தளத்தின் (1st Floor) கட்டிடப்பணி.




Online Zoom Meeting
சத்சங்கத்தில்...



பகவத் காட்டேஜ் கட்டிடப் பணிகளை பார்வையிட்டபோது.

# ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம் சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில் மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர். Lockdown க்கு பிறகு மீண்டும் ஆகஸ்ட் மாதம் ஞான முகாம் நடைபெறும்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய காட்டேஜ்களுக்கான (11'x16') கட்டிட வேலை நடைபெற்று கொண்டுள்ளது.

மேலும் ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர் நன்கொடையாக ஒரு காட்டேஜ்க்கு ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்து இருக்கிறோம். அந்தவகையில் முதற்கட்டமாக ஆறு உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள். இன்னும் இரு உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்க உள்ளோம்.

இதனைத் தொடர்ந்து இரண்டாவது தளத்தில் (2nd Floor) சிறிய அறைகளாக 8 காட்டேஜ்கள் (8' x 8') கட்ட முடிவு செய்துள்ளோம். இவற்றையும் தனித்தனி குளியலறையோடு (Attached Bathroom) (4'x6') வடிவமைக்க இருக்கிறோம். இதற்கான உறுப்பினர் நன்கொடையாக ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம். இதற்கும் 8 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால் ஆர்வம் உள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**




Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai,
Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஓர் ஆன்ம சாதகன் தீவிர ஞானத் தேடுதலில் இருந்தான். அதற்காகத் தன் மனதுக்கு அதிகப் பயிற்சிகளைக் கொடுத்துக் கொண்டிருந்தான். ஆனாலும் அவன் தேடிய விடுதலை கிடைக்கவில்லை. சோர்ந்து போனான். ஒரு ஜென் குருவைச் சந்தித்து தன் நிலையை எடுத்துக் கூறினான்.

குரு சொன்னார், ”மனம் என்பது வெறும் எதிர்விளைவு. அதற்கு எந்தப் பயிற்சியும் கொடுக்காதே. அது எப்படி இருக்கிறதோ அப்படியே ஏற்றுக்கொள்” என்றார்.

குருவின் பதிலை ஆன்ம சாதகனால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. குருவிடம், ”மனதில் ஏற்படும் எதிர்விளைவை யூகித்து அதற்குத் தகுந்தவாறு நம்மால் அதற்குப் பயிற்சியைப் பயிற்றுவித்து விடுதலையைப் பெற முடியாதா?” என்று கேட்டான்.

ஜென் குரு சொன்னார், ”அருகில் இருக்கும் புத்த கோவிலில் இருந்து ஒரு சிறுவன் தினமும் காய்கறி வாங்கக் கடைத்தெருவுக்குப் போவான். அவன் மிகவும் குண்டக்க மண்டக்கவா பேசுபவன். அவன் எப்படிப் பேசுவான் என யூகித்து, நீ அவனிடம் பேசி நீ நினைக்கும் பதிலை முதலில் வாங்கி விடு. பிறகு நீ நினைத்தபடி மனதிற்கு விடுதலையைப் பெறு ” என்றார்.

அந்தச் சீடனும் அடுத்தநாள் காலையில் காய்கறி வாங்க கடைக்கு போகும் வழியில் அந்தச் சிறுவனைச் சந்தித்தான்.

”நீ எங்கே போகிறாய்?” என்று கேட்டான்.

சிறுவனோ ”நானா... என் கால்கள் எங்கே போகின்றனவோ அங்கேதான் போவேன்” என்று பதில் சொன்னான்.

இந்தப் பதில் அவன் மூளையைக் குழப்பியது; உடனே திட்டமிட்டான் 'நாளைக்கு காலையில் அவனைப் பார்த்து அவனிடம் இதே கேள்வியைக் கேட்டால் அவன் அதே பதில் சொல்லுவான். அப்போது அவனிடம் உனக்குக் கால்களே இல்லாத போது நீ எங்கே போவாய்? என்று கேட்டு அவனை மடக்க வேண்டும்' என்று முடிவெடுத்துக் கொண்டான்.

அவன் மறுநாள் காலை கேள்வி கேட்க அவனைச் சந்தித்தான்.

”நீ எங்கே போகிறாய்?” என்று கேட்டான். ”நானா... காற்று எந்த திசையில் அடிக்கிறதோ, அதே திசையில் போவேன்” என்று பதிலளித்தான்.

அவனுக்கு இப்போதும் மூளை குழம்பிப் போனது.

தான் மீண்டும் தோற்கடிக்கப்பட்டுவிட்டதாக எண்ணினான்.

மிகுந்த மன உளைச்சலுக்கு ஆளானான். அடுத்த நாள் அவனைப் பார்த்து 'காற்று அடிக்காமல் இருந்தால் நீ எங்கே போவாய்?' என்று கேட்க வேண்டும் என்று முடிவு எடுத்துக் கொண்டான்.

மூன்றாவது நாளாகவும் சந்தித்தான். ”நீ எங்கே போகிறாய்?” என்று கேட்டான். அவனோ, ”நானா... காய்கறிகள் வாங்க கடைக்குப் போகிறேன்” என்று பதிலளித்தான்.

இந்தப் பதிலைக் கேட்ட சீடனோ மிகவும் நொந்து போனான் ஏனெனில் இப்படி ஒரு பதிலை அவன் எதிர்பார்க்கவே இல்லை. அடுத்த நாளிலிருந்து அவன் எங்கு போனால் என்ன என்று அவனை கண்டுக் கொள்வதில் இருந்து விடுபட்டான் சீடன்.

குரு சொன்னார் ”மனதிற்கு பயிற்சி கொடுப்பதும் இப்படித்தான். உன் முன் முடிவுகள் எதுவும் ஒத்துப் போகாது. அதற்குப் பயிற்சி கொடுப்பதை விட்டு விட்டு உன் வேலையைப் பார்” என்றார்.

சீடன் நன்கு புரிந்து கொண்டான், ”மனம் நமக்கு கட்டுப்பட்டதல்ல, சுதந்திரமாக இயங்கக் கூடியது. அதனோடு போராடுவதை விட்டு விட்டு நமது புற வேலையில் கவனத்தைச் செலுத்துவதே சரி.